3rd November 1958]

**SRI K. SATTANATHA KARAYALAR** : சர்க்கார் கூட்டிய இந்த மகாநாட்டில் மிக முக்கியமான ஒரு சிபார்சு, தொழில் தர்க்கம் ஏற்படும் போது முதலாளியும், தொழிலாளியும், சர்க்கார் லேபர் ஆபீசர் அழைத்தால் வந்து பங்கு எடுத்துக் கொள்ளவேண்டுமென்பது. பல முதலாளிகள் அதை உதாசீனப்படுத்துவதின் காரணத்தால் இந்த சிபார்சு செய்யப்பட்டது. அப்படியிருந்தும் அவர்களை ஏன் கட்டாயப் படுத்த வேண்டாமென்று சர்க்கார் உத்தரவு பிறப்பித்தது ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : கட்டாயப்படுத்துவது என்றால் அதற்கு ஒரு சட்டம் செய்யவேண்டும். அதற்கு நிமித்தம் இல்லாமலேயே இதைக் கவனித்துக் கொள்ளலாம் என்ற அபிப்பிராயத்தில்தான் அரசாங்கம் அப்படிச் செய்தது.

**SRI S. LAZAR** : சில முக்கியமான சிபார்சுகளைப் பொறுத்துச் சொல்கிறபோது இது சம்பந்தமாகச் சட்டம் செய்ய வேண்டுமென்று அறிக்கையிலும் குறிப்பிடப் பட்டிருக்கிறது. இப்பொழுது அமைச்சர் அவர்களும் சொன்னார்கள். இண்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட்ஸ் ஆக்ட் போன்ற முக்கியமான சட்டங்களை, இச்சிபார்சுகளின் அடிப்படையில் திருத்துவதற்கு நமது அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு சிபார்சு செய்திருக்கிறதா ? அப்படியிருந்தால் எப்பொழுது இந்தச் சிபார்சு நடைமுறைக்கு வரும் ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : இண்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட்ஸ் ஆக்டின் பல பிரிவுகளை திருத்த வேண்டுமென்று மத்திய அரசாங்கத்திற்கே யோசனை இருக்கிறது. சமீபத்தில் நடந்த ஸ்டான்ட்டிங் கமிட்டியில் தொழில் அதிபர்களையும், தொழிலாளி பிரதிநிதிகளையும் சேர்த்து இதுமாதிரிக் கலந்து பேசினார்கள். ராஜ்ய அரசாங்கங்களின் அபிப்பிராயங்களையும் பெற்றிருக்கிறார்கள். இந்த சர்க்காரும் அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறது. இதை எல்லாம் வைத்து மறுபடியும் டிஸம்பர் மாதத்தில் இதைப் பற்றிப் பரிசிலனை செய்து இந்தத் திருத்தத்தை மத்திய அரசாங்கமே ஏற்று நடத்துவது என்பதுதான் அபிப்பிராயம்.

*Selection Committee for Elementary Grade Training Schools*

*819 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) ஆரம்ப ஆசிரியர்கள் பயிற்சிப் பள்ளிகளுக்கு மாணவர்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுக்கு குழுவிற்கு (Selection Committee) நியமிக்கப்படும் உறுப்பினர்கள் எந்த அடிப்படையில் நியமிக்கப்படுகிறார்கள் ?

(ஆ) எந்த அடிப்படையில் மாணவர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Non-official members of the Committees for the selection of candidates for admission to basic training schools are selected on the basis of their interest in basic education. There is no selection committee of non-official members for non-basic training schools.

(*b*) Copies of proceedings of the Director of Public Instruction showing the basis of selection of candidates for admission to Basic Training Schools are placed on the table of the House.

**SRI S. M. ANNAMALAI** : ஸ்ரீ விநாயகம் அவர்கள் கேட்ட கேள்விக்கு ஒரு அறிக்கை வைத்திருக்கிறது. அதைப் பார்க்கிறபோது அந்தக் குழுவில் உள்ள உறுப்பினர்கள் அனைத்தும் காங்கிரஸ் கட்சிக்காரர்களாக இருக்கிறார்கள். தவிர மாற்றுக் கட்சியில் உள்ள தோழர் ஒருவருக்குக் கூட அதில் இடமில்லை. காங்கிரஸ் கட்சிக்காரர்கள் மட்டுந்தான் அந்தக் குழுவில் இருக்க வேண்டுமென்று சர்க்காரின் கொள்கையா ?

---

* Printed as Appendix IX on pages 485–488 infra.

[3rd November 1958

THE HON. SRI C. SUBRAMANIAM : சர்க்காரின் கொள்கை, இந்த ஆதாரக் கல்வித் திட்டத்தில் உண்மையிலேயே யாருக்கு நம்பிக்கை இருக்கிறதோ அவர்களைப் போடவேண்டுமென்பதுதான். ஆகவே யாருக்கு அதில் நம்பிக்கை இருக்கிறதோ அவர்களை, டி.பி.ஐ. அவர்கள் ஆலோசனை செய்து சேர்த்துக்கொள்ள ஏற்பாடு செய்யப்படும்.

SRI A. VEDARATHNAM : மேஜை மேல் வைக்கப்பட்டிருக்கும் அறிக்கையில் "போஸ்ட் பேஸிக்" வகுப்பில் தேறிய மாணவர்களை ஸீனியர் பேசிக் ட்ரெயினிங் ஸ்கூலில் சேர்ப்பதற்கு என்பது சேர்க்கப்பட வில்லை. காரணம் என்னவென்று அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுதுதான் அந்த அறிக்கை விடுக்கப்பட்டிருக்கிறது. அதனால் ஒரு சமயம் அது சேர்க்கப்படா மல் இருக்கலாம்.

SRI A. GOVINDASAMY : பெண்களைப் பயிற்சிக்கு எடுக்கிற இடங் களிலாவது பெண் எம்.எல்.ஏ.-க்களை ஏன் சேர்க்கவில்லை. காங்கிரஸ் தரப்பில் உள்ள பெண் எம்.எல்.ஏ-க்களுக்கு இதில் நம்பிக்கை இல்லையா ? ஆகவே இனியாவது அவர்களைச் சேர்ப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது, ஒரு சங்கடமான வேலை. ஆகவே பெண் எம்.எல்.ஏ-க்கள் இதில் பங்கு எடுத்துக்கொண்டு வேலை செய்வது கஷ்டம். சில இடங்களில் அவர்களும் போடப்பட்டிருக் கிறார்கள்.

SRIMATHI KOLANTHAIAMMAL : இரண்டு பெண் எம்.எல். ஏ.-க்கள் இந்த தேர்வுக் குழுவில் இடம் பெற்றிருக்கிறார்கள் என்பது இந்தச் சபைக்குத் தெரியுமா ?

(பதில் இல்லை.)

SRI S. M. ANNAMALAI : நம்பிக்கை இருக்கிறதா இல்லையா என்று தெரிந்து கொள்வதற்கு ஏதாவது ஒரு பரீட்சை வைக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பரிசீலனை செய்து பார்த்து எப்படி பரீட்சை வைக்கவேண்டுமென்று முடிவு செய்யலாம் (சிரிப்பு).

*Untouchability*

* 820 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether the Government have agreed to the suggestions made by the Commissioner for Scheduled Castes and Scheduled Tribes in his annual reports to maintain a list of villages where untouchability is still prevalent;

(*b*) if so, whether such a list has since been prepared; and

(*c*) the total number of villages where untouchability is prevalent?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) Yes, Sir.

(*c*) About 100 villages.